# மனிதனே நீ யார்?

மவுலானா வஹிதுத்தின் கான்

The Reality of Life (Tamil)



அல்லாஹ்வின் திருப்பெயரால்

## இறைவனின் படைப்பு திட்டம்

ஒரு மேற்கத்திய சிந்தனைவாதி எழுதுகையில் "மனிதன் இந்த பரந்த உலகத்திற்கு சிறிதும் சம்பந்தம் இல்லாதது போல் காணப்படுகிறான்" மனிதன் இந்த உலகத்திற்காகவோ அல்லது உலகம் இந்த மனிதனுக்காகவோ படைக்கப்பட்டதாகத் தோன்றவில்லை, இந்த உலகமும் மனிதபடைப்பும் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக தோற்றமளிக்கின்றன" என்று குறிப்பிடுள்ளார்.

மனிதன் பெற்றுள்ள எண்ணற்ற திறமைகளில் ஒரு சிறிதே இங்கு பயன்படுகின்றது. மனிதன் மரணம் இல்லாத ஒரு வாழ்க்கையை வாழ விரும்பிய போதிலும், அவனுடைய விருப்பமின்றியே மரணம் அவனை சூழ்ந்து கொள்கிறது. மரணம் அவன் வாழ்விற்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கிறது. வாழும் போது எண்ணற்ற ஆசைகளை இதயத்தில் சுமக்கின்றான், ஆனால் அவை நிறைவேறாமல் போய் விடுகின்றன. வாழும் போது அவன் கண்ட கனவுகள் எல்லாவற்றையும் நனவாக்க முடிவதில்லை. இந்நிலை ஏழை, பணக்காரன் என இருவருக்கும் ஒன்றே தான்.

இந்த உலக நியதியும் மனிதபடைப்பும் ஏன் ஒன்றுக்கொன்று ஒத்துப் போகவில்லை? இந்த கேள்விக்கான பதிலை தெரிந்து கொள்ள வேண்டு மெனில் இறைவனின் படைப்பின் நோக்கத்தை விளங்கிக் கொள்வது மிக அவசியம்.

உண்மையாதெனில் இறைவன், மனிதனை ஒரு உன்னதமான நோக்கத்திற்காகவே படைத்துள்ளான். இறைவனின் நோக்கத்தை தெரிந்து கொள்ள மனிதன் முதலில் தன்னைப் பற்றி முழுமையாக அறிந்து கொள்ள வேண்டும். ஒரு இயந்திரத்தை இயக்கும் முன் அதற்கான பயன்பாட்டு முறை குறித்த அறிவு அவசியம் அல்லவா? மேலும் அந்த இயந்திரத்தை வடிவமைத்த பொறியியலாளரை தவிர வேறு யார் அதை சரியாகப் புரிந்து கொள்ள முடியும்? மனித நிலையும் இதே தான்.

பரந்து விரிந்த இந்த பிரபஞ்சத்தில் பூமியை தவிர வேறு எந்த ஒரு இடத்திலும் மனிதனைப் போன்ற ஒரு சிறந்த படைப்பு காணப்படவில்லை. "படைப்புகளில் மிகச் சிறந்த படைப்பு இந்த மனித படைப்பு" என்று சரியாகவே சொல்லப்பட்டுள்ளது. அதாவது மற்ற படைப்புகளைக் காட்டிலும் மிகச் சிறந்த மற்றும் மிகவும் அர்த்தமுள்ள படைப்பு ஆகும். அத்தகைய அர்த்தமுடைய படைப்பு, ஒரு உன்னத

நோக்கத்திற்காக தான் படைக்கப்பட்டுள்ளது.

ஆம். இறைவன் மனிதனை ஒரு உன்னதமான நோக்கத்துடன் படைத்து இருக்கின்றான். மனிதன் சோதனை மிக்க சொற்ப காலத்தை இந்த நிலையற்ற உலகத்தில் இறைவனின் விருப்பப்படி கழித்தால் பின்னர் இதனைத் தொடர்ந்து அவனுடைய நற்செயல்களுக்கு பகரமாக என்றும் நிலைத்து இருக்கும் மறுமை உலகத்திற்குச் செல்லும் உரிமையை பெறுகிறான். அந்த மறுமை உலகத்தின் மறுபெயர் தான் சொர்க்கம் எனப்படும்.

நாம் வசித்து கொண்டு இருக்கும் தற்போதைய உலகம் படைப்புகளின் அதிபதியான இறைவனால் உருவாக்கப்பட்ட உலகின் முதல் பகுதியாகும். இறப்புக்கு பிறகு நாம் வாழப் போகும், என்றும் நிலைத்திருக்கும் மறுமை உலகம் இதன் மறுபகுதி யாகும். இறைவன் மனிதனுடைய வாழ்க்கையை இரு நிலைகளாகப் பிரித்துள்ளான். ஒன்று இறப்பிற்கு முந்தைய குறுகிய கால வாழ்வு மற்றொன்று இறப்பிற்கு பின்னால் வரும் என்றும் நிலைத்திருக்கும் வாழ்வு, இறப்பிற்கு முந்தைய குறுகிய கால வாழ்வு மனிதனுக்கு ஒரு சோதனைக் காலம் ஆகும். இந்த சோதனைக் காலத்தில் அவனுடைய செயல்களுக்கு நற்கூலியாகவோ அல்லது தண்டனையாகவோ

மறுமையில் அவனுடைய வாழ்வு அமையப் பெறும். இதுவே இந்த உலகைப் பற்றிய இறைவனின் செயல் திட்டமாகும். தீய மனிதர்கள் என்றும் சொர்க்கத்தில் நுழைய அனுமதிக்கப்பட மாட்டார்கள். சொர்க்கத்திற்குச் செல்ல தகுதியான மனிதர்களை தேர்ந்தெடுப்பது தான் மனித படைப்பின் உண்மையான நோக்கமாகும்.

## சொர்க்கம் என்றால் என்ன?

எல்லாவிதத்திலும் முழுமை பெற்ற உலகத்தின் மறுபெயர் தான் சொர்க்கம். அதன் தேடல் ஒவ்வொரு ஆண் மற்றும் பெண்ணிடமும் இருக்கிறது. சொர்க்கத்தில் தான் மனிதன் எல்லா விதத்திலும் திருப்தி அடைய முடியும். மனிதன் தன் வாழ்நாள் முழுவதுமே சொர்க்கத்தை அடைய விருப்பம் கொண்டுள்ளான். மேலும் சொர்க்கம் தகுதியான மனிதர்களை வரவேற்பதற்காக காத்துக் கொண்டு இருக்கிறது.

சொர்க்கத்தில் மனிதன் எப்படி சிந்திக்க வேண்டும் என விரும்புகிறானோ அப்படியே சிந்திக்கிறான். எதைப் பார்க்க ஆசைப்படுகிறானோ அதையே பார்க்கிறான். அங்கே மகிழ்வு தரக்கூடிய இனிய இசையை அவனால் கேட்க முடியும். எதைத் தொட்டால் மிக்க மகிழ்ச்சி கிடைக்குமோ அதை தொட முடியும். அவன் வாழ்க்கையை அர்த்த முடையதாக ஆக்கக்கூடிய தூய துணைவியரும் அங்கு உண்டு. அங்கே வீசும் காற்று அவனுக்கு வசந்தமாகவும். உண்ணும் உணவு, பருகும் பானம் போன்றவை அவனுடைய இவ்வுலகில் எங்கும் கிடைக்காததாகவும், கற்பனையிலும் பார்க்க முடியாததாகவும் இருக்கும்.

## சொர்க்கத்திற்கு செல்ல தகுதியாவது எப்படி?

இந்த சோதனை கால வாழ்க்கையில் இருந்து ஒருவர் மீண்டு சொர்க்கத்திற்கு செல்ல இரண்டு அடிப்படைத் தகுதிகள் தேவைப்படுகின்றன. ஒன்று இறைவன் ஒருவன் என்ற உண்மையை ஏற்றுக் கொள்வது. மற்றொன்று ஒழுக்கமான வாழ்க்கையை மேற்கொள்வது. எந்த ஆண் மற்றும் பெண் இந்தத் தேர்வில் வெற்றி பெறுகிறார்களோ அவர்கள் சொர்க்கம் செல்வார்கள். அங்கு அவர்களுடைய அனைத்து விருப்பங்களும் பூர்த்தியடைகின்றன. எவர் இந்த தேர்வில் தோல்வி அடைகிறார்களோ அவர்கள் என்றென்றும் துன்பம் அளிக்கக் கூடிய நரகத்தில் வாழ்வார்கள்.

மனிதனுக்கு இந்த உலகில் முழு சுதந்திரம் கொடுக்கப்பட்டுள்ளது. இருப்பினும் அவனுக்கு கொடுக்கப்பட்ட இந்த சுதந்திரம் அவனுடைய பிறப்புரிமை அன்று. அது ஒரு தேர்வு தாள் மட்டுமே. அதில் வெற்றி பெற ஒரே வழி, இறைவன் ஒருவன் என்ற உண்மையை கட்டாயத்தின் அடிப் படையில் இல்லாமல் அவனுடைய சுய விருப்பத்தின் அடிப்படையில் முழுமையாக ஏற்றுக் கொண்டு இறைவனுக்கு அடிபணிவது தான். இறைவன் ஒருவனே என்ற உண்மையின் கீழ் அடிபணிவது

ஒரு மனிதன் செய்யும் மிகப்பெரிய தியாகம் என்பதில் எந்த சந்தேகமும் இல்லை. இவ்வாறு செய்வதன் மூலம் மனிதன் இறைவன் முன்பாக தன்னை எளிமைப்படுத்திக் கொள்வது மட்டும் அல்லாது மற்றவர்களிடமும் நல்லமுறையில் நடந்து கொள்ள உதவுகிறது. இச்சிறந்த பண்பானது அவனை சிகரத்திற்கு உயர்த்தி பின்னர் அதுவே சொர்க்கத்திற்கு வழிகாட்டியாகவும் அமைகிறது.

இரண்டாவது முக்கியமான தேவை ஒழுக்க மான வாழ்க்கையை மேற்கொள்வது. பொதுவாக கோபம், பழிவாங்குதல், பொறாமை, போட்டி மற்றும் வெறுப்புணர்ச்சி போன்றவை மனிதனைக் கெடுக்கக் கூடிய கெட்ட குணங்கள் ஆகும்.

இது போன்ற விஷயங்களில் மனிதன் கவனமாக இருக்க வேண்டும். மன இச்சைக்கு ஆட்படாமல் உயர்ந்த கொள்கை மற்றும் எண்ணங்களின் அடிப் படையில் ஏற்படுத்தப்பட்ட நற்குணங்கள் தான் மனித வாழ்விற்கு உகந்தது.

## படைப்பின் நோக்கம் சரியான அணுகுமுறை

இறைவனின் படைப்பு நோக்கத்தின் அடிப்படையில் மனிதர்கள் ஒவ்வொரு நிமிடமும் சிரமங்களை மேற்கொள்கிறார்கள். அது அவர்கள் மேல் சுமத்தப்பட்ட சோதனையின் ஒரு பகுதி யாகும். இறைவனின் படைப்பின் ரகசியத்தில் கஷ்டங்களும் துன்பங்களும் வாழ்க்கையோடு ஒருங்கிணைந்த ஒன்றாகும் இந்த சோதனைகள் மற்றும் துயரங்களில் இருந்து எந்த ஒரு மனிதனும் தன்னை விடுவித்துக் கொள்ள இயலாது. இந்த உலகம் சொகுசு மற்றும் உல்லாசத்திற்கான இடம் அல்ல என்பதை நினைவுபடுத்தவே இந்த ஏற்பாடு. இது சொர்க்கத்திற்கு தான் தகுதியானவன் தானா என்பதை தீர்மானித்து கொள்வதற்கு உண்டான சோதனைக் களம்.

இன்றைய உலகில் மருத்துவ அறிவியல் மற்றும் தொழில்நுட்பம் எவ்வளவோ முன்னேறி இருந்தாலும் கூட வாழ்வில் துயரங்களும் சிரமங் களும் இருந்து கொண்டு தான் இருக்கின்றது. படைப்பின் இரகசியத்தை சரிவர புரிந்து கொள்ளாததால், இவையெல்லாம் ஏன் நடக்கிறது என்பதைப் புரிந்து கொண்டு தீர்வு காண்பதற்கு

பதிலாக மனிதன் எதிர்முகமாக நடக்கின்றான். இறைவன் தனக்கு ஏற்படுத்திய சோதனையில் தோல்விக்கு மேல் தோல்வி அடைகின்றான்.

இன்றைய சூழலில், மன அழுத்தம் என்பது பெரும்பாலான மக்களுக்கு ஒரு முக்கிய பிரச்சனை யாக உள்ளது. இதை சரி செய்வதாக கூறிக் கொண்டு இன்று பல்வேறு நிறுவனங்களும் முளைத்து உள்ளன. இந்த நிறுவனங்கள் இவர் களை நிரந்தமாக குணப்படுத்துவதற்கு பதிலாக அவர்களின் சிந்தனைகளை குறைப்பதன் மூலம் தற்காலிகமான தீர்வை மட்டுமே பெற்றுத் தருகின்றன. மன அழுத்தத்தை கட்டுக்குள் வைத்துக் கொள்வது அல்லது எதிர்மாறாக செயல் படுத்துவது போன்றவற்றை காட்டிலும் மனதைச் செம்மைப் படுத்துவது தான் அதற்குரிய சரியான தீர்வு ஆகும்.

மனிதனுக்கு ஏற்படும் எல்லாப் பிரச்சனை களுக்கும் காரணம், இந்த உலகிலேயே எல்லா வற்றையும் அனுபவித்து விட வேண்டும், இந்த உலகி லேயே சொர்க்கத்தை உருவாக்கிவிட வேண்டும் என்பது தான். ஆனால் அது இயலாத ஒன்று.

மேலும் இறைவனின் படைப்பு நோக்கத்தின் படி, மனிதன் இந்த நிலையற்ற உலகில் தன்னை தகுதிப்படுத்திக் கொண்டால் அவனுக்கான

சொர்க்கம் மறுமையில் தான் கிடைக்கிறது. இதன் பிறகு, படைப்பின் உண்மையை புரிந்து கொண்டு அதற்கேற்றார்ப் போல் வாழ்க்கையை அமைத்து கொள்வதே சரியான அணுகுமுறையாகும். இறைவனின் அன்பைப் பெறுவதை தன் வாழ்வின் இலட்சியமாக கொண்டால் மரணத்திற்குப் பிறகு சொர்க்கத்திற்கான அனுமதியை பெற இயலும். இந்த உலகத்தின் துன்பங்களில் இருந்து மறுமை உலகத்திற்கு செல்வதற்கான இரகசியத்தை உணர்ந்து கொண்டவரே வாழ்க்கையில் வெற்றி பெற்றவர் ஆவார்.

## மிக முக்கியமான பிரச்சனை

மனிதர்களுக்கு இன்றுள்ள மிகப் பெரிய பிரச்சனை எது என்ற கேள்வி எழுப்பப்பட்டால் பதில் சிலர் பெருகி வரும் அணு ஆயுதங்கள் என்றும், சிலர் மக்கள் தொகை பெருக்கம் தான் இன்றுள்ள மிகப் பெரிய பிரச்சனை என்றும், இன்னும் சிலர் இன்றைய மனித சமுதாயத்தின் மிகப் பெரிய பிரச்சனை வறுமை மற்றும் பொருளாதார சிக்கல்கள் தான் என்றும் குறிப்பிடுவார்கள். இப்படிப்பட்ட பல்வேறு கருத்துக்களுக்கு காரணம், மக்கள் தங்களைப் பற்றி சரியாக உணர்ந்து கொள்ளாதது தான்.

அப்படி தெரிந்து கொண்டால், மனித வாழ்க்கையின் இரகசியத்தை அறிந்து கொள்வது தான் மிகப்பெரிய பிரச்சனை என்பதை அனைவரும் ஒப்புக்கொள்வார்கள்.

நான் ஒரு நாள் மரணிக்க வேண்டியிருக்கிறது, பிறகு தன்னைப் படைத்த இறைவனிடம் கேள்விக் கணக்கிற்காக செல்ல வேண்டும் என்பதை மனிதன் அறிந்து கொண்டால் இந்த வாழ்க்கையை விட மறுமையை தான் தனது அடிப்படை பிரச்சனையாக எடுத்துக் கொள்வான்.

ஆனால் மனிதன் எதை தன் அடிப்படைப் பிரச்சனையாக மாற்றியுள்ளான் என்பதை அறிய மக்கள் கூட்டம் கூட்டமாக குவியும் கடைவீதிகளில் ஒரு மாலைப் பொழுதில் சற்று நின்று கவனித்தால் அது தெளிவாக நமக்குப் புரிந்து விடும்.

எதற்காக கடைவீதிகளில் வாகனங்களின் நெரிசல் ஏற்படுகிறது? மக்கள் எதற்காக அங்கும் இங்கும் அலைந்து திரிகின்றார்கள்? கடை உரிமை யாளன் ஏன் தன் கடையை அலங்கரித்து கொண்டு இருக்கிறான்?. மக்களின் பேச்சு வார்த்தை எதைக் குறித்து அமைந்து இருக்கின்றது? ஒருவர் மற்ற வரிடம் எது குறித்து பேசுகின்றார்கள்? அவர்களின் முக்கிய நோக்கம் என்ன? மனிதன் தன் அயராத உழைப்பின் பலனை, தன் ஆளுமையை எதற்காகச் செலவு செய்கிறான்? அவன் வீட்டில் இருந்து எதைக் கொண்டு வருகிறான்? மீண்டும் அதற்கு பதிலாக எதை வாங்கிச் செல்கிறான்? மேற்கூறிய கேள்விகளுக்கு உங்களால் பதில் கூற முடிந்தால்,

மனிதன் எதைத் தன் வாழ்க்கையின் அடிப்படை பிரச்சனையாகக் கருதியுள்ளான்? அவன் எதை அடைய விரும்புகிறான் என்பது உங்களுக்குத் தெளிவாகப் புரிந்து விடும். இவையெல்லாம் ஒவ்வொரு மனிதனும் தன் மன இச்சைகள் மற்றும்

ஆசையை தீர்த்துக் கொள்ளத்தான் அலைகின்றான் என்பதைக் காட்டுகிறது. மறுமை உலகிற்கு பதிலாக இந்த உலக வசதிகளை அடைவதற்காகத் தான் ஆர்வம் கொண்டு இருக்கின்றான். உலகில் அவனது ஆசை, நோக்கம் நிறைவேறி விட்டால் அவன் மகிழ்வாக இருக்கிறான். அவனது ஆசை நிராசையாகி விட்டால் அவன் மிகவும் நொந்து போய் விடுகிறான்.

மனிதனின் பார்வையில் வாழ்க்கை வசதிகளை அடைவது, ஓய்வு நேரத்தை மகிழ்ச்சியுடன் கழிப்பது, புகழ் மற்றும் அந்தஸ்து இவற்றைப் பெறுவதைத் தான் வெற்றியின் அளவு கோலாக நிர்ணயிக்கப்பட்டு உள்ளன. அதே சமயம் இவற்றை இழப்பது தோல்வியாகவும் அவமானமாகவும் எண்ணிக் கொண்டு இருக்கிறான். மறுமையைப் பற்றி எத்தகைய சிந்தனையும் இல்லாமல் இந்த வாழ்க்கையையே நோக்கமாகக் கொண்டு இவற்றை பெறுவதற்காகத் தீவிரமாக அலைந்து கொண்டு இருக்கிறான்.

நகரங்களில் மட்டுமல்ல, பட்டித்தொட்டி, கிராமம் என அனைத்து பகுதியிலும் வாழும் மக்களின் நிலைகளும் இவ்வாறு தான் உள்ளன. ஆண்கள், பெண்கள், ஏழை, பணக்காரன்,

பெரியவர்கள், சிறுவர்கள், வயோதிகன், வாலிபன், தனக்கென ஓர் அடிப்படை கொள்கையைச் சார்ந்தவன், நாத்திகவாதி, கற்றவன், கல்லாதவன், கிராமவாசி, நகரவாசி என அனைவரின் நிலமையும் இது தான்.

மனிதன் தனது ஆளுமை, உழைப்பின் சக்தி, தன் காலம், அவகாசம் என அனைத்தையும் உலக வாழ்வில் இன்பங்களை பெற்றுக் கொள்வதற்காகச் செலவு செய்கிறான். அதைத் தான் அடிப்படை நோக்கமாகக் கொண்டுள்ளான். உலக வசதிகளை அடைவதற்குத் தான் சார்ந்துள்ள கொள்கை உட்பட எதையும் தியாகம் செய்யவும் அவன் தயார். எவ்வாறாயினும் அவனின் உலக நோக்கம் நிறைவடைய வேண்டும். இதனால் தான் மனிதன், தனது உண்மையான அடிப்படைத் தேவை எது என்பதைப் பற்றி அலட்சியமாக இருக்கின்றான்.

தன் வாழ்க்கையை பொழுது போக்காக மாற்றி உலகத்தை அடைய அலைபவனுக்கு இந்த உலக வாழ்க்கையில் மட்டும் தான் வெற்றி கிட்டும், மேலும் மறுமையில் அவனுக்கு எந்த பலனும் இருக்காது.

உதாரணமாக ஒருவன் தன் வாலிப வயதில் உழைக்காது, சேமிக்காது இருக்கின்றான், முதுமை

அடையும் போது கை, கால்கள் சோர்ந்து விடுகின்றது. உழைக்க தெம்பில்லாமல் போகும் போது தான் தான் நஷ்டமடைந்ததை நினைத்து வருத்தப்படுகின்றான். மறுமைக்காக எந்த ஏற்பாடும் செய்யாதவர்களின் நிலமையும் இது தான். உலக வாழ்க்கையில் இலயித்துக் கொண்டு மறுமை வாழ்விற்காக எந்த ஏற்பாடும் செய்யாமல் இருக்கின்றவர்களின் நிலமை இளமையில் உழைக்கத் தவறிய இந்த இளைஞனின் நிலை போன்றது தான். நம்மைச் சுற்றியுள்ளவர்கள் மரணிப்பதை கண்கூடாக பார்க்கும் போதும் மறுமையைப் பற்றிய சிந்தனையோ அதற்கான ஏற்பாடோ நம்மிடையே இல்லை.

போர்க்காலத்தில் போர்ப்படைத் தளபதி எச்சரிக்கை செய்கின்றார், எதிரிப்படையினர் மாபெரும் படையை திரட்டிக் கொண்டு அணு ஆயுதங்கள் மற்றும் போர் தளவாடங்களுடன் வந்து கொண்டு இருக்கிறார்கள், சற்று நேரத்தில் நகரமெங்கும் நெருப்பும் புகை மண்டலமும் சூழப் போகிறது, பொது மக்கள் தங்களுக்கு அருகாமையில் உள்ள பாதுகாப்பான இடங்களில் சென்று தஞ்சம் புகுந்து கொள்ளுங்கள் என்று போருக்கான எச்சரிக்கை விடுக்கப்பட்ட உடனேயே மக்கள் அனைவரும் நகரின் அனைத்து சிறிய/பெரிய

சாலைகளிலும் தெருக்களின் மூலை முடுக்குகளிலும் முண்டியடித்து கொண்டு ஓட ஆரம்பித்து விடுவார்கள். இந்த அபாய எச்சரிக்கைக்கு பின்னும் அங்கேயே குத்துக்கல் போல் நிற்பவனை என்னவென்று சொல்வது? சுத்த வடிக்கட்டின முட்டாள் என்று தானே சொல்ல வேண்டும்!

இந்த உலகத்தில் வாழும் மனிதர்களின் உதாரணம் இது போன்றது தான். இந்த உலகத்தின் அதிபதியாகிய இறைவன் தன் தூதர்களின் மூலம் இதை விட மாபெரும் ஆபத்து நிகழப் போகிறது என்பதைக் குறித்து எச்சரித்துள்ளான். அது என்ன வென்றால், "மனிதர்களே! எனக்கு அடிபணிந்து வாழுங்கள், யார் என்னை வணங்கி நான் சொன்னபடி எனக்கு அடிபணிந்து வாழவில்லையோ அவனை அவன் சிந்தித்திராத நிரந்தரமான வேதனையில் நான் ஆட்படுத்துவேன். அதில் அவன் நிலையாக இருப்பான், அவனால் அதிலிருந்து ஒரு போதும் வெளியேறவே முடியாது."

இந்த எச்சரிக்கையை அனைவரும் கேட்டிருக்கிறோம். அதனை ஏதோ ஒரு வகையில் ஏற்று இருக்கிறோம். ஆனால் இன்று சில மனிதர்களின் நிலைப்பாடு எதையும் அறியாதவர்களைப் போல் இருக்கிறது. உலக இன்பத்தை அடைய குற்றம்

புரியவும் தவறிழைக்கவும் தயங்குவதில்லை. வாழ்க்கையின் நோக்கம் ஒரு திசையில் இருக்க அவர்கள் வேறு திசையில் பயணமிக்கிறார்கள். போர்த் தளபதியின் வார்த்தையை கேட்டு ஓடும் மக்கள் ஏன் இறைவனின் எச்சரிக்கைக்கு எந்த வித உணர்வும் இல்லாதவர்களாக அசைவற்று இருக்கிறார்கள்?

இதற்கான காரணம் என்ன? போரின் எச்சரிக்கையைக் கேட்டவுடன் அதன் விளைவு என்னவாகும் என்பதை மக்கள் ஏற்கனவே அனுபவப் பட்டும், பார்த்தும் இருக்கின்றனர். எனவே அதன் விபரீதத்தை உடனடியாக விளங்கிக் கொள்கிறார்கள்.

மறுமையின் எச்சரிக்கையை கேட்ட பின்பும் அதன் விபரீதத்தைப் பற்றி நாம் உணர்வதில்லை. காரணம் அது மக்களின் கண் பார்வையிலிருந்து மறைத்து வைக்கப்பட்டு இருக்கிறது. நமக்கும் மறுமைக்கும் மத்தியில் மரணம் என்ற ஒன்றுள்ளது. அந்த மரணம் அதன் பின் விளைவுகளை பார்க்க முடியாத, உணர முடியாத வகையில் ஒரு திரையாக உள்ளது. எனவே தான் இறைவன் கூறும் மறுமை நாளின் கோர விளைவுகளை பற்றிய எச்சரிக்கையை கேட்டும் நமக்கு எத்தகைய பீதியும் நம்பிக்கையும்

ஏற்படுவதில்லை. ஆனால் போர்த் தளபதி விடுக்கும் போர் குறித்த எச்சரிக்கையை கேட்டவுடன் அதன் விளைவு என்னவாகும் என்பதை மக்கள் கண்ணால் காண்பதால் அதன் விபரீதத்தை உடனடியாக விளங்கி கொள்ள முடிகிறது. எனவே தான் மக்கள் போர் எச்சரிக்கை கேட்டவுடன் பயப்படுகின்றனர். இறைவன் கொடுக்கும் எச்சரிக்கை குறித்து அச்சமற்று இருக்கின்றனர். அதன் விளைவாக, தான் செய்யும் பாவங்களுக்கு அவன் வருத்தப்படுவதில்லை, ஒழுக்கமான வாழ்க்கை வாழ முயற்சிப்பதில்லை.

நமக்கு இறைவன் நெற்றியில் கீழ் விழித்திருக்கும் இரு கண்களை மட்டும் தரவில்லை. நமது கண்களின் பார்வையை விட்டு மறைந்துள்ள சித்தாந்தங்களையும், எதார்த்தங்களையும் கண்டறிவதற்கு மற்றொரு கண்ணையும் தந்து இருக்கிறான். அது தான் அறிவுக் கண் அல்லது மனக்கண்.

மக்களுக்கு மறுமையைப் பற்றிய நம்பிக்கை ஏற்படாததற்கு காரணம் அவர்கள் தங்களுடைய அறிவைப் பயன்படுத்தாதது தான். மக்கள் சற்று அறிவுக் கண்ணை திறந்து சிந்தித்தால் நம் கண்களுக்கு முன் வருபவைகளை விட நம் கண்களுக்கு புலப்படாமல் மறைந்து இருக்கும் வாழ்க்கை தான் உண்மையானது என்பதனை

உறுதியாக ஏற்றுக் கொள்வார்கள்.

உலகத்தில் உள்ள அனைவராலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரே உண்மை எது? என்று கேட்டால், மரணம் என்று தான் என அனைவரும் கூறுவார்கள். இன்னும் ஒருவருக்கு மரணம் எந்த நேரத்திலும் ஏற்படலாம் என்று எல்லோரும் நன்கு அறிந்து இருக்கிறார்கள். ஒரு மனிதனுக்கு மரணத்தைப் பற்றிய சிந்தனை ஏற்பட்டால் மரணத்திற்குப் பின் தன் பிள்ளைகளின் நிலை என்னவாகும் என்ற சிந்தனையில் நொடிந்து விடுகிறான்.

எனவே தன் குழந்தைகளின் எதிர் காலத்தை பாதுகாக்க தன் ஆயுள் முழுவதையும் செலவு செய்கிறான். ஆனால் தன்னுடைய மறுமை வாழ்க்கைக்காக எந்த ஒரு முன்னேற்பாடும் செய்ய முற்படுவதில்லை. அவனது மரணத்திற்குப் பின் அவனது குடும்பத்தினர்கள் மட்டும் தான் வாழ்வார்கள், மேலும் மரணிக்கும் இவனுக்கு இனி வாழ்க்கையே இல்லாததைப் போல் செயல் படுகிறான்.

மரணித்திற்கு பின்பு தான் உண்மையான வாழ்க்கையே ஆரம்பமாகிறது என்ற உண்மையை உணராதவனாக வாழ்கிறான்.

மனிதன் மரணித்த பின் சவக்குழியில்

மண்ணைப் போட்டு மூடுவது தன் வாழ்க்கையை குழித் தோண்டி புதைத்து மட்டுமல்ல அதன் அர்த்தம். மாறாக தன்னுடைய மறுமை வாழ்க்கையின் ஆரம்பம் தான் அது என்ற எதார்த்தத்தை மனிதன் அறிந்து இருந்தால் தன் குழந்தைகளின் எதிர்க்காலத்தை பற்றி சிந்திப்பதோடு மட்டும் அல்லாது மரணித்தபின் தன் நிலை என்னவாகும் என்பதைப் பற்றியும் சிந்தித்து இருப்பான்.

மதச்சார்புள்ளவன், மத நம்பிக்கையற்றவன் என இருவரிடமும் மறுமை வாழ்க்கையை பற்றிய நம்பிக்கை முழுமையாக இல்லை. மரணத்திற்குப் பின்வரும் மறுமை வாழ்க்கையை குறித்து இரண்டு விதத்தில் சந்தேகங்கள் அவர்களிடம் எழுகின்றன.

1. மனிதன் மரணித்த பின் மண்ணோடு மண்ணாகி எரிந்து சாம்பலாகி விட்ட பின் அவன் எவ்வாறு மறுபடியும் உயிருடன் எழுப்பப்படுவான்?

2. இந்த உலக வாழ்க்கை நம் கண்களுக்கு புலப்படுகிறது; நாம் வாழ்கிறோம். ஆனால் மறுமை வாழ்க்கை நம் கண்களுக்கு புலப்படுவதில்லையே? மறுமை வாழ்க்கையை எவரும் கண்ணால் கண்டது இல்லையே? பிறகு எவ்வாறு மறுமையை நம்புவது?

வாருங்கள் இந்த இரு கேள்விகளுக்கும் பதிலை காண்போம்.

**மரணித்திற்குப் பின் மனித வாழ்க்கை**

நான் மரணித்து மண்ணோடு மண்ணாகிய பின்பு எழுப்பப்படுவேனா? என்ற கேள்வி மனிதர்களின் மனதில் ஆழமாக பதிந்து இருக்கிறது. ஆனால் ஒரு சிலரே இந்த கேள்விக்கான விடையை அறிந்துக் கொள்ள முயற்சிக்கின்றனர்.

நாம் சற்று தீர்க்கமாக சிந்தித்தால் இந்த பிரச்சனை குறித்த பதிலுக்கு தீர்வு காணலாம். இறைவன் மனிதனை சோதிப்பதற்காக தான் மறுமை உலகை அவர்களின் கண்களில் இருந்து மறைத்து வைத்துள்ளான். இறைவன் தனது வல்லமையை உணர்த்தவும், சிந்திப்பதற்கும் ஏராளமான அத்தாட்சிகளை இவ்வுலகில் படைத்துள்ளான். இந்த உலகம் மறுமையின் பிம்பத்தை பிரதிபலிக்கும் ஒரு கண்ணாடி. இதை எப்படி ஏற்றுக் கொள்வது என்றால் முதலில் மனிதன் உருவான விதத்தை நோக்குவோம். மனிதன் ஆரம்பத்தில் மனித உருவாக்கத்திற்கு சம்பந்தமில்லாத அற்பமான ஒரு துளி விந்தாக இருக்கின்றான். அந்த விந்து தாயின் கருவறையில் மனித உருவமாய் உருவாகிறது. கண்ணுக்குத் தெரியாத, அற்பமான விந்து வளர்ந்து

இன்று மனிதனாக பரிணமித்து காட்சியளிக்கும் போது மண் குழியில் புதைந்து சிறிய சிறிய தூள் தூசுகளாக அணுக்களாக பூமியில் பரவி இருக்கும் நாம் மீண்டும் முழு மனிதராக எழுப்பப்படுவோம் என்பதில் நமக்கு என்ன சந்தேகம்?

முன்பு கண்களுக்குத் தெரியாத உணர்வுகள் பரிச்சயம் செய்ய முடியாத அளவிற்கு ஆகாயத்திலும் பூமியிலும் அதிகமாக பரவியிருந்த அணுக்களின் கலவை தான் ஓடியாடி திரியக் கூடிய இன்றைய மனிதனின் ஆரம்ப நிலை. இறைவன் தனது வல்லமையைக் கொண்டு இந்த அணுக்களை இன்று பேசக்கூடிய, நடக்கக் கூடிய, சிந்திக்கும் ஆற்றல் பெற்ற மனிதனாக உருவாக்கி இருக்கும் போது, மனிதன் மரணித்து நீர், காற்று, பூமி இவற்றில் கலந்து விட்டாலும் இறைவனின் கட்டளை வந்து விட்டால் நாம் மறுபடியும் முழு மனித உடலுடன் எழுப்பப்படுவோம் என்பதில் ஆச்சரியம் என்ன உள்ளது? முதல் தடவை நடந்த அதே நிகழ்வு மறுபடியும் நிகழப் போகிறது. நாம் மரணித்த பிறகு நீர், நிலம், காற்றில் கலந்துள்ள நம் உடல் அணுக்கள், இறைவனின் கட்டளை ஏற்பட்டவுடன் மீண்டும் உருவம் எடுக்க போகின்றது. இறைவனுக்கு இது சுலபமானதே.

உலகத்தில் உள்ள சில உதாரணங்களே மறுமை வாழ்க்கை ஒன்று உண்டு என்ற எதார்த்தத்தை நமக்கு சுட்டிக் காட்டுகின்றன. உதாரணமாக ஒவ்வொரு மழைக்காலத்திலும் நம்மை சுற்றியுள்ள நிலப்பரப்பு அனைத்தும் பசுமையாக தென்படுகிறது.

மழைக்காலத்துக்குப் பின்தொடரும் கோடைக் காலம் அந்த பசுமையான தாவரங்களுக்கு மரண ஓலை சுமந்து வருகிறது. கோடைக்காலத்தில் பசுமை மாறி பூமி வறண்ட நிலப்பரப்பாகி விடுகின்றது. பூத்துக் குலுங்கிய பூமி வறண்டு வெற்றிடமாக காட்சியளிக்கிறது.

ஒரு முழு வாழ்க்கை ஆரம்பித்து, அது முடிந்தும் விடுகிறது. அடுத்த வருட மழைக் காலத்தில் வறண்டு மடிந்த தாவரங்கள் அனைத்துமே மீண்டும் புத்துயிர் பூத்து பசுமையாக காட்சியளிக்கின்றன. மனிதன், மரணித்த பின், உயிர்ப் பெற்று எழுவதும் இது போன்றது தான்.

இதையே மற்றோர் கோணத்திலும் சிந்திக்க லாம். மரணித்த பின் வாழ்க்கை உண்டா இல்லையா என்ற கேள்வி எழுவதற்கு முதன்மை காரணம், வாழ்க்கையைப் பற்றிய நம் புரிதல் தான். மனித வாழ்க்கை என்பது நமது இந்த பௌதிக உடல்

மட்டும் தான் என நாம் தீர்மானித்து விட்டதால் மனித உருவம் மடிந்து மண்ணாகி போனப் பின் எவ்வாறு மறுபடியும் முழு உருவமாக எழ முடியும் என நாம் சிந்திக்கிறோம்.

மனிதனுக்கு மரணமடைந்தால் அவன் ஊமையாக செயலற்று கிடக்கிறான். அவனது செயல்பாடுகள் அனைத்தும் முடிந்து விடுகின்றன. இறுதியாக அவன் மண்ணில் புதைக்கப்படுகிறான் அல்லது எரிக்கப்படுகின்றான். சில தினங்களிலேயே மண்ணோடு மண்ணாகக் கலந்து இறுதியாக ஒன்றுமில்லாதவன் போல் நம் பார்வையில் இருந்து மறைந்து விடுவதை நாம் நாள்தோறும் காணுகிறோம், பிறகு எவ்வாறு மீண்டும் ஒரு முறை முழு உடலுடன் உயிர்த்தெழ முடியும் என தோன்றுகிறது?

புறத்தோற்றத்தில் நாம் காணும் 'உடலை' மனிதன் எனக் கூற இயலாது, மாறாக அந்த உடலில் குடிக் கொண்டுள்ள ஆன்மா தான் உண்மையான மனிதன். உடலை பொருத்தமட்டில் அது 'செல்கள்' எனப்படும் உயிர் அணுக்களால் கட்டப்பட்டுள்ளது. இந்த 'செல்கள்' ஒரு கட்டடத்தில் உள்ள செங்கல்களைப் போன்றது. நாட்கள் செல்லச் செல்ல இந்த செல்கள் அழிந்து

புதிதாகத் தோன்றுகிறது. நாம் உண்ணக்கூடிய உணவு மூலம் இந்த உருமாற்றம் ஏற்படுகின்றது. பழைய செல்கள் அழிந்து புதிய செல்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. ஆக்கலும், அழித்தலும் நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றது. அந்த வகையில் பத்து வருடங்களுக்கு முன்பாக உங்களிடம் இருந்த செல்கள் இப்போது இல்லை. உங்களுடைய இந்த உடல் முற்றிலும் புதிய உடல், கடந்த பத்து வருடங்களாக உங்களிடம் இருந்து இறந்த செல்களை ஒருங்கிணைத்தால், உங்களைப் போன்றே தோற்றமுடைய ஒரு புது மனிதனை உருவாக்கி விட முடியும்.

உங்களுக்கு வயது நூறு என்றால், உங்களைப் போன்றே தோற்றமுடைய பத்து உருவங்களை உருவாக்க முடியும். ஆனால் அவை வெறும் எலும்பு சதைகளே அன்றி அவற்றில் உங்கள் ஆன்மா பரிணமிப்பது கிடையாது. நீங்கள் அந்த உடல்களில் எல்லாம் இல்லை.

அந்தப் பழைய உடல்களை எல்லாம் விட்டு விட்டு, உங்கள் ஆன்மா ஒரு புதிய உடலில் குடி கொண்டுள்ளது. உடல் மாறி விட்டாலும் 'நீங்கள்' நீங்களாகவே இருக்கிறீர்கள். உதாரணமாக நீங்கள் பத்து ஆண்டுகளுக்கு முன் ஒரு நபருடன்

ஒப்பந்தம் செய்து இருந்தால். அதை இப்போதும் நான் தான் செய்தேன் என்று நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்கள். பத்து ஆண்டுகளுக்கு முன் இருந்த உங்கள் உடலமைப்பு தற்போது இருக்காது. அப்படி இல்லா விட்டாலும் கூட அதை நான் தான் செய்தேன் என்கிறீர்கள். அந்த ஒப்பந்தம் செய்த கைகளோ, நாவோ இப்போது இல்லா விட்டாலும் அது நான் தான் செய்தேன் என்று ஒப்பந்தத்தை நிறைவேற்றுகிறீர்கள்.

ஆக, மனிதன் இறந்த உடன் மக்கி மறைந்து போகும் உடலுக்கு மனிதன் என்று பெயரல்ல. மாறாக இறந்து போகாத ஆத்மாவுக்கு தான் மனிதன் என்று பெயர் என்ற எதார்த்த உண்மையை மாறுபடும் உடலையும் மாறுபடாத ஆத்மாவையும் கொண்டு புரிந்து கொள்ள முடிகிறது.

சக்பஸ்த் போன்ற உருதுக் கவிஞர்கள் சொல்வது போல்,

"அணுக்களின் சங்கமும் பிரிவும் தான் மனித வாழ்க்கை, அணுக்கள் ஒன்று சேர்வதால் வாழ்க்கை உருவாகிறது. அந்த அணுக்கள் பிரிவதால் மனிதனுக்கு மரணம் ஏற்படுகிறது"

இது மிகத் தவறான கருத்து.

இவர்களின் வாதம் அறிவுக்கும் இயற்கைக்கும் முரணானது. இவர்கள் கூறுவதைப் போல் அணுக்கள் ஒன்று சேர்ந்து இருப்பது தான் வாழ்க்கை என்றால், அந்த வாழ்க்கை அணுக்கள் உயிருடன் இருக்கும் போது மட்டுமே நிலைத்திருக்கும். ஒரு விஞ்ஞானி இந்த அணுக்களை பூமியில் இருந்து பிரித்தெடுத்து ஒன்று சேர்த்தால் மட்டுமே உயிர் தோன்றி இருக்கும். இந்த இரண்டுமே முரண்பட்டதாக தோன்றுகிறது.

விபத்துகளில் கை, கால்களை இழந்தவர்கள் மட்டும் உயிரிழப்பது இல்லை. சில நேரங்களில் உடல் ஆரோக்கியமாக இருக்க கூடிய மனிதர்கள் கூட திடீர் மாரடைப்பால் இறக்கின்றனர். எந்த மருத்துவரும் இதற்கான காரணத்தைக் கூற முடிவதில்லை. அவர்களின் இறந்த உடல் எந்த குறைபாடும் இன்றி நன்றாக இருக்கின்றது. ஆனால் 'ஆன்மா' உடலை விட்டு பிரிந்து விட்டது. அணுக்களால் ஒன்று சேர்க்கப்பட்ட உடல் மட்டும் வாழ்க்கை அல்ல, வாழ்க்கை என்பதன் பொருளே வேறு.

ஓர் உயிருள்ள மனிதனைப் படைப்பதற்கு உலகில் எந்த ஆய்வுக் கூடமும் இல்லை. எனினும் உயிரில்லாத மனித உடலை உருவாக்க முடியும். இதிலிருந்து, மனித உடல் சாதாரண அணுக்களால்

ஆனது என்பது தெரிகிறது. நம் உடலில் இருக்கும் கார்பன், கரித்துண்டில் இருக்கும் கார்பன் போன்றது. ஹைட்ரஜன் மற்றும் ஆக்சிஜன் தண்ணீரின் மூலக்கூறில் இருப்பது போன்றது தான். ஹைட்ரஜன் வாயு மண்டலத்தில் இருப்பது போன்றது தான். ஆனால் உயிருள்ள மனிதன் இப்படி சில சாதாரண அணுக்களைக் கொண்டு ஓர் அசாதாரண தொகுப்பு முறையால் ஆக்கப்பட்டவனா? அல்லது வேறு ஏதேனும் ஒன்றால் ஆனவனா? மனித உடல் இப்படிப்பட்ட பொருட்களால் ஆனது என்றாலும், இப்பொருட்களின் சேர்க்கையால் ஓர் உயிருள்ள மனிதனை உருவாக்கும் நிலைக்கு நாங்கள் இன்னும் வரவில்லை என விஞ்ஞானிகள் ஒத்துக் கொள்கிறார்கள். இதிலிருந்து நாம் அறிவது யாதெனில், மனிதன் என்பவன் வெறும் உயிரற்ற அணுக்களின் சேர்க்கையால் ஆனவன் அல்ல. மாறாக, அணுக்களால் ஆன உடல் மற்றும் உயிரின் சேர்க்கை தான் மனிதன். மனிதன் இறந்து விட்டால் அவனது உடல் மட்டும் கண்ணுக்குத் தெரிகிறது. அவனது உயிர் வேறொரு உலகத்திற்கு பயணமாகிறது.

இந்த விவாதத்தின் மூலம் நாம் அறிந்துக் கொள்வது என்னவென்றால், மனித வாழ்க்கை

இந்த உலகத்துடன் முடிந்து விடுவதல்ல.

ஆன்மா மறுமை உலகுடன் தொடர்புடையது என்பதை உணர்ந்து கொண்டால் 'மரணத்திற்கு பின் ஒரு வாழ்க்கை' என்ற கொள்கையை நமது அறிவு ஏற்றுக் கொள்ளும். மரணத்திற்கு முன் உள்ள தற்போதைய வாழ்க்கை ஒரு முழுமையான வாழ்க்கை அல்ல, மரணத்திற்கு பின்னும் ஒரு வாழ்க்கை உண்டு, மேலும் இந்த உலகம் ஒரு தற்காலிகமானது என்பதை நாம் உணர முடிகிறது. ஆகவே நாம் இறந்து விட்டால் வாழ்க்கை முடிந்து விடுவதில்லை. மற்றுமொரு உலகுக்கு வாழ்க்கை தொடர்கிறது.

இதைப் புரிந்துக் கொண்ட பெரும்பாலான மக்கள் இறைவனையும், மறுமையையும் நம்பவே செய்கின்றனர். மேலும் அவர்கள் மறுக்கக்கூடியவர் களாகவும் இல்லை. பிரச்சனை எதுவென்றால் அவர்களின் நம்பிக்கை அவர்களின் செயல்களில் எதிரொலிப்பதில்லை. அவர்கள் நோக்கமெல்லாம் உலகியல் வெற்றி ஒன்று மட்டும் தான்.

இதைப் புரிந்துக் கொள்ள வேண்டுமானால் உதாரணமாக பூமியின் புவி ஈர்ப்பு விசை மறைந்து 6000 மைல் வேகத்தில் பூமி சூரியனை நோக்கி

சென்று கொண்டிருக்கிறது என்று நமக்கு விஞ் ஞானிகள் சொல்வார்களேயானால் என்ன ஆகும் என்று யோசித்துப் பாருங்கள். ஒரு சில வாரத்தில் இந்த பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து உயிரினங்களும் அழிந்து போய் விடும் என்ற நிலையில் உலகமே ஸ்தம்பித்து விடும்.

ஆனால், இந்த உலகம் இதை விட பயங்கரமான ஒன்றை சந்திக்கவிருக்கின்றது. அது தான் மறுமை நாள் (அல்லது) தீர்ப்பு நாள். அன்று ஒவ்வொரு மனிதனும் அவனுடைய செயல்களைக் குறித்து விசாரிக்கப்படுவான். இந்தப் பிரபஞ்சம் தோன்றிய அன்றே அதனைக் குறித்து முடிவு செய்யப்பட்டு விட்டது. பலருக்கு இந்த உண்மை தெரிந்து இருந்தாலும் மிகச் சிலர் மட்டுமே மறுமை வாழ்விற்காக தம்மை தயார் செய்து கொள்கிறார்கள்.

## நாம் எவ்வாறு தீர்ப்பளிக்கப்படுவோம்?

நாம் எவ்வாறு தீர்ப்பு வழங்கப்படுவோம் என்பதை புரிந்துக் கொள்ள மனிதனின் செயல்களை குறித்து ஆராய வேண்டி இருக்கிறது. மனிதனின் செயல்கள் இரண்டு விதமாக இருக்கின்றன. முதல் வகை செயல்கள் எந்த விதமான நீதி நெறி முறைகளுக்கும் உட்படுத்த முடியாதவை. அவை எதிர்பாராத விதமாக அல்லது தன்னிச்சையாக நடப்பவை. அதன் விளைவுகள் நல்லதாக அல்லது கெட்டதாக இருப்பினும் அவற்றை நம்மால் தீர்மானிக்க முடியாது. ஏனென்றால் அவை எந்த வித உள்நோக்கமும் இல்லாமல் நடைபெறுகிறது. இரண்டாவது வகையான செயல்கள் அவை ஆழமான உள்நோக்கத்துடன் நன்மை, தீமை கருதி செய்யப்படுகிறது. அது நீதி நெறிமுறைகளுக்கு உட்பட்டது

இந்த இரண்டையும் புரிந்துக் கொள்ள வேண்டுமானால், ஓர் உதாரணம் தேவைப்படுகிறது. ஒருவன் நடந்து செல்லும் போது, மரத்தின் மீது எதேச்சையாக வைக்கப்பட்ட கல், அவன் தலை மேல் விழுந்து பலமான காயம் ஏற்பட்டு விட்டது என்றால் அதற்காக அவன் மரத்தை தாக்கவோ, பழி வாங்கவோ செய்வானா? ஒரு போதும் மாட்டான்!

ஆனால், வேண்டுமென்றே யாராவது உங்கள் மீது கல்லை எறிந்து காயப்படுத்தி விட்டால், நீங்கள் கோபப்பட்டு அதே போல பழி வாங்கத் துடிப்பீர்கள் அல்லவா? அது போல, நிகழ்வை பொருத்து அல்ல நோக்கத்தை பொறுத்து தான் செயல்கள் தீர்மானிக்கப்படுகின்றன. அதைத் தான் நீதி நெறிமுறை என்கிறோம்.

மேலே குறிப்பிடப்பட்ட உதாரணம் மிக எளிமையான ஒன்று. உடனடியாக கணித்து எளிதில் தீர்ப்பு சொல்ல முடியும். ஆனால் வாழ்க்கையில் நிகழக் கூடிய பல்வேறு குற்றங்களில், பல தெரியாமல் மறைக்கப்பட்டு விடுகிறது. குற்ற வாளிகள் பல சமயங்களில் அடையாளம் கண்டு பிடிக்கப்படுவதில்லை. சட்டமோ, சமுதாயமோ எந்த தண்டனையும் வழங்குவதில்லை. சில சமயங்களில் குற்றவாளிகள் தங்களது பணபலம், புத்திசாலித் தனம் இவற்றைக் கொண்டு எந்த தண்டனையும் பெறாமலேயே தப்பித்து விடவும் செய்கின்றனர். இதனாலேயே குற்றங்களும் அதிகரிக்கின்றன.

ஆனால், நம்மைப் படைத்த இறைவன் நமது குற்றங்களைக் குறித்து விசாரிப்பான் என்றால் எவனுக்கும் குற்றம் செய்ய துணிவு இருக்காது. எப்படிப்பட்ட மனிதனாக இருந்தாலும் ஒரு நாள்

தன்னைப் படைத்தவன் முன்பாக வெறுங்கையுடன், எதையும் மறைக்க இயலாது நிற்க வேண்டியுள்ளது. அவனவனது நல்ல, தீய எண்ணங்களுக்கு ஏற்ப நீதி வழங்கப்பட்டு சொர்க்கத்திற்கோ அல்லது நரகத்திற்கோ செல்ல வேண்டி இருக்கிறது.

சொர்க்கம், நரகம் இரண்டும் நம் பார்வையில் இருந்து மறைத்து வைக்கப்பட்டுள்ளது. அவை மனிதனுக்கு வெளிப்படுத்தப்பட்டு விட்டால் நல்ல மனிதனை சரிவர சோதித்து அறிய இயலாது. மனிதனின் ஒவ்வொரு செயலுக்கும் ஒரு விளைவு உண்டு. நாம் செயல்படுவதை பொறுத்து அதில் நன்மையும் தீமையும் ஏற்படுகிறது. நன்மை செய்தால் வாழ்க்கைத் தேர்வில் வெற்றி, தீமை செய்தால் தோல்வி.

## மறுமை என்றால் என்ன?

மறுமை உலகம் எனப்படுவது, நமது எண்ணங்களுக்கு ஏற்றப்படி செயல்களுக்கான முழு பலனையும் அனுபவிக்கும் இடமாகும். இப்பொழுது நமக்கு சில கேள்விகள் உதிக்கின்றன. மறுமை உலகம் என ஒன்று உண்டு என எப்படி உறுதி செய்து கொள்வது? அதனை அடைவதற்கு நாம் எப்படி நம்மை தயார்படுத்திக் கொள்வது? இதற்கான பதிலை தெரிந்து கொள்ள சப்தம் (ஒலி) எப்படி உருவாகின்றது என ஆராய்வோம்.

நம்முடைய குரல் வெளிப்படுத்தும் சப்தத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அதன் ஒலியை நாம் கேட்கிறோம். பேசுவதற்கு நாவை அசைக்கிற போது குரல் வளையிலிருந்து வெளிப்படும் காற்றின் ஒலியைத் தான் நாம் சப்தம் என்கிறோம். ஆனால் அது எவ்வாறு வெளிப்படுகிறது என்பதை நம்மால் பார்க்க முடியாது. இந்த ஒலி அலைகள் காற்றில் பதிவு செய்யப்படுகின்றது.

இன்று பல ஆராய்சியாளர்கள் கூறுகிறார்கள், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த மனிதர்களின் நாவில் இருந்து வெளியான பேச்சுக்கள் அனைத்தும் காற்றுடன் கலந்து பதிவு செய்யப்பட்டு இருக்கிறது.

அதை கேட்க முடியாது என்பதாக கூறுகின்றனர். எனினும் அந்த சப்தங்களை உள்வாங்கி வெளிப் படுத்தக் கூடிய கருவி ஏதேனும் நம்மிடம் இருந்தால் நாம் அதை கேட்க இயலும்.

நம்மைச் சுற்றி காற்றின் ஒரு உரை உள்ளது. நமது வாயிலிருந்து வெளியாகும் வார்த்தைகள் எல்லாம் அதில் பதிந்து விடுகின்றன. நமது செயல்களின் அடித்தளமாக இருக்கும் எண்ண வோட்டங்கள் அனைத்தும் அதில் பதிவு செய்யப் படுகின்றது. இசைத்தட்டுப் பெட்டி (CD Player) எப்படி CD செலுத்தியதும் எவ்வாறு அது பதிவு செய்ததை வெளிப்படுத்துமோ அதேப் போன்றது தான் நம்முடைய அனைத்து செயல்களும் அதன் உள் நோக்கங்களும் பதிவு செய்யப்பட்டு எஜமான னாகிய இறைவன் நம்மை மறுபடியும் எழுப்பும் நாளன்று அவையனைத்தும் நம் கண்ணுக்கு முன் கொண்டு வரப்படும். அன்று மனிதன் அவை அனைத்தையும் பார்த்து வியந்து கூறுவான்:

"எங்களுடைய கேடே! இதென்ன புத்தகம் (எங்களுடைய பாவங்கள்) சிறிதோ பெரிதோ ஒன்றையும் விடாது இதில் வரையப்பட்டு இருக்கிறதே" என்று கூறுவான். 18:49

## கணக்கு கொடுக்க வேண்டும் எனும் கோட்பாடு

மனிதன் இறைவன் இன்றி வாழ முடியாது. அவனுடைய வாழ்க்கை இறைவன் இன்றி நிறைவு பெறாது. ஒரு சிந்தனையாளன் கூறுகின்றான்: இறைவன் என்று ஒருவன் இல்லாமல் போயிருந்தால் நாம் ஒருவனை கண்டுபிடிக்க வேண்டிய நிலைக்கு ஆளாகி இருப்போம். உண்மையில் இறைவன் இருக்கிறான் என்பதை யூகத்தின் அடிப்படையில் இல்லாமல் உறுதியாகவே இறைவன் இருக்கின்றான் என்று நம்பலாம். நம்முடைய வாழ்க்கையில் அவனுக்குரிய தகுதி நிலையை நாம் நல்க வேண்டும்.

மனிதன் அவனுடைய வாழ்க்கையை சீராக நடத்த சிறந்ததொரு நியதியை வைத்திருக்க வேண்டும் என விரும்புகிறான். இறைவன் மனிதனுக்கு வேண்டிய இந்த நியதியை தான் முழுமை பெற்ற ஒரு கொள்கையாக வழங்குகிறான்.

மனிதப் பிறவிகள் இயந்திரங்களைப் போன்று கட்டுப்படுத்தப்படக் கூடியவர்களோ, விலங்குகளை போல் முழுமையாக உள்ளுணர்வால் செயல்படக் கூடியவர்களோ அல்லர். மனிதப் பிறவிகள் சுதந்திரமாக செயல்படக்கூடியவர்கள். சுயமாக சிந்தித்து முடிவு எடுக்கக் கூடியவர்கள். அத்தகைய

மனிதனை நேர்வழியில் நடத்துவது எப்படி, அவனைத் தொடர்ந்து ஒழுக்கமாக வாழச் செய்வது எப்படி என்ற கேள்வி எழலாம். சமுதாய கட்டுப்பாடு, சட்ட திட்டங்கள் அல்லது சீர்திருத்தவாதிகளின் அறிவுரைகள் இவை யாவும் முழுமையான பலனளிக்கக் கூடியவை அல்ல என்று தான் வரலாறு கூறுகிறது.

சமுதாயத்தின் சட்ட திட்டங்கள் குறை பாடானது என்பதை நம் வாழ்க்கை அனுபவம் சுட்டிக் காட்டுகிறது. சட்டத்தில் உள்ள குறை பாடுகளை பயன்படுத்தி தவறு செய்பவன் எளிதில் தப்பிக்க முடியும். சீர்திருத்தவாதிகளின் வெறும் அறிவுரைகளாலும் முழுமையான மாற்றத்தைக் கொண்டு வர இயலாது. நமக்கு மேல் அளப்பறிய சக்தி படைத்த ஒருவன் இருக்கின்றான், அவன் நம்மை அணு அணுவாக கண்காணித்துக் கொண்டிருக்கின்றான், நற்கூலியும் தண்டனையும் கொடுப்பான், அவனிடம் இருந்து தப்பிக்க முடியாது என்கிற எண்ணம் ஏற்பட்டால் தான் ஒருவன் ஒழுக்கமாக வாழ முடியும்.

அந்த வல்லமை மிக்க சக்தி ஒன்று தான் இருக்க முடியும், அது தான் இறைவன். இறை நம்பிக்கை மூலம் ஒரே நேரத்தில் இரண்டு

நிலைகளில் செயல்பட முடியும். ஒன்று, மனிதன் அவனுடைய நடவடிக்கைகளை எல்லாம் அறிந்தவனும் தன்னை தண்டிப்பதற்கு எல்லா அதிகாரமும் படைத்தவனுமாகிய இறைவனை தனது பாதுகாவலனாக கொள்வான். இறைவனின் தண்டனையில் இருந்து மனிதன் தப்பிக்கவே முடியாது. ஆகவே அத்தகைய இறைநம்பிக்கை மனிதனை தனிப்பட்ட வாழ்க்கையிலும், பொது வாழ்க்ஸ்கையிலும் நல்ல விதமாக நடந்துக் கொள்ள நிர்ப்பந்திக்கிறது. அப்படி நடந்தால் மட்டும் தான் மனிதன் இறைவனின் கோபத்தில் இருந்து தன்னைக் காத்துக் கொள்ள முடியும்.

மற்றொன்று, இறைநம்பிக்கை என்பது அளவற்ற நம்பிக்கையை அளிக்கிறது. இந்தப் புவி வாழ்க்கையில் உண்மையை பேணி நடப்பதால் இழப்புக்குள்ளாக நேரிட்டாலும் அல்லது வேறு சில இடர்ப்பாடுகளுக்கு ஆளானாலும் மனிதன் அவற்றை எல்லாம் பொறுமையுடன் சகித்துக் கொள்ள முடியும். அவன் நேர்வழியில் நின்று பிறழாது வாழ்ந்தால் இறைவன் அவனுக்கு நிரந்தரமான சுவர்க்க வாழ்க்கையை நல்குவான். இதை விட சிறந்த நற்கூலி வேறு எதுவுமில்லை என்ற நம்பிக்கை ஏற்படும்.

மனிதன் தானாகவே ஒழுக்க நெறிகளில் இருந்து பிறழாமலும் நீதி தவறாமலும் நடப்பது என்பது எளிதில் சாத்தியமானதல்ல. தான் வல்லமை மிக்க இறைவனின் ஆதிக்கத்தின் கீழ் வாழ்கிறோம், அந்த இறைவன் முழுமையாக நீதி பரிபாலிக்க கூடியவன், அவனிடம் மனிதனை நேர்வழியில் செலுத்தும் ஆற்றலும் அதிலிருந்து பிறழ்பவனை தண்டிக்கும் அதிகாரமும் உள்ளது எனும் உறுதியான நம்பிக்கை இருந்தால் தான் அது சாத்தியம் ஆகும்.

ஒரு குற்றவாளிக்கு முழுமையான தண்டனை வழங்குவதற்கும் அது போலவே ஒருவருடைய நற்செயல்களுக்கு முழுமையான நற்கூலி வழங்குவதும் இவ்வுலகில் சாத்தியமல்ல. இறைநம்பிக்கையானது நற்கூலியையும், தண்டனையும் முழுமையாக வழங்கப்படக் கூடிய வரையறை ஏதுமற்ற ஓர் மறுமை உலகைப்படைக்கும் ஆற்றல் இறைவனுக்கு உண்டு எனும் உண்மையை ஊட்டுகிறது.

எல்லாம் வல்ல ஓர் இறைவன் இருக்கிறான் எனும் உணர்வு நாம் கணக்கு கொடுத்தாக வேண்டும் எனும் எண்ணத்தை ஊட்டுகிறது. இந்த எண்ணம் நேர்வழியில் சிந்திக்கவும் நற்செயல்களில் ஈடுபடவும் தூண்டுகிறது. இறைவனுடைய தண்டனையை பற்றிய பயம் மனிதனை எச்சரிக்கை உணர்வுடன்

நடக்கத் தூண்டுகிறது. மேலும் நேர்வழியில் நடந்தால் இறைவனிடம் இருந்து நற்கூலியை எவ்வகையிலும் எல்லா சூழ்நிலையிலும் பெறுவோம் எனும் உறுதியோடு மனிதன் செயல்படுகிறான்.

இந்த இறைநம்பிக்கை தான் இன்றைய இழப்பை நாளைய வரவாகவும், இன்றைய துன்பத்தை நாளைய இன்பமாகவும் மாற்றும் என்ற மன உறுதியைத் தருகிறது.

## மனித வாழ்வின் உண்மையை உணருங்கள்

*சில நிமிடங்களுக்கு இப்படி சிந்தித்துப் பாருங்கள்*

முடிவில்லாத ஒரு தொடர் வாழ்க்கைக்காக நாம் படைக்கப்பட்டு இருக்கிறோம். வாழ்க்கையின் இடையில் ஏற்படும் மரணம் என்பது வாழ்க்கையின் முற்றுப் புள்ளியல்ல. அது மறுமை உலகின் ஆரம்பம் மட்டுமே மரணம். நமது மரணத்திற்கு முன் உள்ள வாழ்க்கை மற்றும் மரணத்திற்கு பின் உள்ள வாழ்க்கை இரண்டிற்கும் இடையே ஒரு பிரிவினையை ஏற்படுத்துகிறது.

உதாரணமாக ஒரு விவசாயி தன் நிலத்தில் விவசாயம் செய்கிறான். அறுவடைக்கு முன்பு வரை தனது முதலீட்டையும் உழைப்பையும் செலவு செய்கிறான். இறுதியில் அவன் நிலம் அறுவடைக்கு தயாராக உள்ள நிலையில் அவன் அறுவடை செய்கிறான். அதன் மூலம் அந்த ஆண்டிற்கு தேவையான தானியங்களை அவன் பெற்றுக் கொள்கின்றான்.

அறுவடைக்காலம் என்பது விவசாயத்தின் ஒரு பகுதி, அக்காலத்தில் தனது உழைப்பையும், நேரத்தையும் செலவு செய்து பயிர் நட வேண்டும்.

அறுவடைக்கு முன்பு வரை விவசாயி கடின உழைப்பும் செலவீனங்களும் மட்டுமே செய்கிறான். அறுவடைக்கு பின்பு தான் அதன் பலனை அவன் அனுபவிக்கிறான்.

நம் வாழ்க்கையும் இதைப் போன்றது தான். நாம் இந்த உலகத்தில் மறுமைக்கு தேவையானவற்றை தயார் செய்து கொள்கிறோம். ஒவ்வொரு மனித னிடமும் மறுமைக்கான விவசாய நிலம் ஒன்று இருக்கிறது. சிலர் அதில் பயிரிடுகின்றார்கள். இன்னும் சிலர் அதை தரிசு நிலமாக வைத்திருக் கின்றார்கள். சிலர் அதில் பயனுள்ள நல்ல விதைகளை விதைக்கின்றார்கள். இன்னும் சிலர் அதில் ஒன்றுக்கும் பயன்படாதவற்றை விதைக்கிறார்கள். சிலர் அதற்காக பாடுபடுகிறார்கள். மேலும் சிலர் அவர்கள் விதைத்தது பற்றி எந்த வித அக்கறையும் இல்லாதவர்களாகவும் அதன் பலன் என்னவாகும் என்று எந்த சிந்தனையும் இல்லாதவர்களாகவும் பொழுது போக்குத்தனமாகவும் சுற்றிக் கொண்டும் இருக்கிறார்கள். சிலர் பழங்களையும், பூக்களையும் அறுவடை செய்ய, இன்னும் சிலர் முட்களை அறுவடை செய்கின்றார்கள். நமக்கு மரணம் வரும் வரை நாம் இங்கு விவசாயம் செய்யலாம். மரணம் அடைந்த பின் தான் மறுமைக்காக நாம் தயார்

செய்த விவசாய நிலத்தை அறுவடை செய்யும் நாள் ஆரம்பம். மரணித்த பின் உலகத்தில் மூடிய நமது கண் மறுமையில் திறக்கப்படும். அன்று நம் வாழ்நாள் முழுவதும் உழைத்து செய்த விவசாயத்தின் பலன்களை நம் முன் கொண்டு வரப்படும்.

வினை விதைத்தவன் வினை அறுப்பான், தினை விதைத்தவன் தினை அறுப்பான் என்பதை போல நாம் விதைத்ததைத் தான் நாம் அன்று அறுவடை செய்ய முடியும். ஒவ்வொரு மனிதனும் உலகத்தில் எதை முற்படுத்துகிறானோ அதைத் தான் மறுமையில் பலனாக பெறுவான்.

உழைப்பிற்கேற்ற கூலி என்பது அனைத்து விவசாயிகளும் அறிந்த ஒன்று. தன் முயற்சியாலும், உழைப்பாலும் எந்தப் பயிரை விதைக்கின் றார்களோ அதைத் தான் அறுவடையும் செய்ய முடியும். விதைப்பது ஒன்றும் விளைவது ஒன்றுமாக இருக்கவே இருக்காது. அதே போன்று தான் மனிதர்கள் உலகில் தன் முயற்சியாலும் உழைப்பாலும் முற்படுத்தியவைகள் தான் அவனுக்கு மறுமையில் கிடைக்கும்.

உழைப்பிற்காக ஒதுக்கப்பட்ட நேரம் முடிந்து விட்டது என்பதை அறிவிப்பது தான் மரணம்.

மறுமை என்பது கூலி பெறும் இடம். மரணத்திற்கு பின் நமக்கு மீண்டும் ஒரு முறை மறுமை தயாரிப்புக்காக வாய்ப்பு கொடுக்கப்பட மாட்டாது. மறுமை வாழ்க்கை ஒரு முடிவில்லாத வாழ்க்கை.

என்ன ஒரு இக்கட்டான நிலை! மனிதன் வாழும் போதே இதைப் பற்றியெல்லாம் அறிந்து செயல்பட வேண்டும். மரணித்த பின் இதனை அறிவதில் எந்த பலனும் இல்லை. மரணித்த பின்பு தான் செய்த தவறைப் பற்றி தெரிவதாலோ, பாவமன்னிப்பு கேட்பதாலோ, மேல் முறையீடு செய்வதாலோ எந்த பயனும் இல்லை.

மனிதன் தன்னுடைய இலக்கைப் பற்றி அறியாது இருக்கின்றான். மனிதன் அழியும் இந்த உலகின் சொற்ப ஆசைகளைத் தேடி அலைந்து கொண்டு தன் முடிவு நாளைக் குறித்தும் தன் மரணத்தைக் குறித்தும் எத்தகைய சிந்தனையும் இல்லாமல் சுற்றுகிறான். அதற்காக வேண்டியே தன் உழைப்பையும், விலை மதிப்பற்ற நேரத்தையும் செலவு செய்கிறான். ஆனால் அவனது முடிவு நாளோ அவனை தன் பக்கம் வேகமாக இழுத்து சென்று கொண்டு இருக்கிறது. அகிலத்தின் அதிபதியான இறைவன் மனிதர்களை என்றும் முடிவில்லாத எந்த கண்ணும் கண்டிராத, நிம்மதியான, அழகான,

சுவனத்தின் பக்கம் அழைக்கின்றான், ஆனால் மனிதனோ தன் அறியாமையின் காரணமாக உலக சுகங்களில் மூழ்கி விட்டான். சேமிப்பதாக எண்ணி வாழ்வை வீணடித்துக் கொண்டு இருக்கின்றான். உலக வாழ்க்கையும் அற்ப சுகங்களும் தான் முடிவில்லாதவை என்று எண்ணி காற்றில் பறக்கும் பாலைவன மணலின் மனக்கோட்டை கட்டிக் கொண்டு இருக்கின்றான். நிச்சயமாக அது இடிந்து தரை மட்டமாகி விடும்.

மனிதா! உணர்ந்துக் கொள்! நீ என்ன செய்துக் கொண்டு இருக்கிறாய்? மாறாக என்ன செய்ய வேண்டும் என்பதை!

## இறையுணர்வுடைய வாழ்க்கை

இந்த பூமி, சூரியனை சுற்றி வரும் ஒரு கோள். அதன் ஒரு சுற்று முடிய ஓராண்டு காலம் ஆகிறது. பூமியில் உயிரினங்கள் ஆரோக்கியமாக வாழ இந்த சுழற்சி மிகவும் அவசியம். பூமி, இவ்விதம் சூரியனைச் சுற்றி நகரவில்லை எனில் அது பயனற்று போகும்; உயிரினங்கள் அழிந்து விடும்.

நாம் இவ்வுலகில் நம்முடைய வாழ்க்கையை எவ்விதம் அமைத்துக் கொள்ள வேண்டுமென்பதற்கு இது ஓர் நல்ல எடுத்துக்காட்டாகும். பூமி கதிரவனைச் சுற்றி வருவது போல், மனிதன் இறைவனை மையமாகக் கொண்ட வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டும். மனிதனுடைய செயல்பாடுகள் எல்லாம் இறைவனையே மையமாகக் கொண்டு அமைந்திருக்க வேண்டும்.

இயற்கையின் விதிகளுக்கு உட்பட்டு பூமி சூரியனைச் சுற்றி வருகிறது. ஆனால் மனிதன் தானாகவே விரும்பி இறைவனுக்கு அடிபணிய முன் வர வேண்டும். இறைவனைச் சார்ந்திருக்கும் ஒரு வாழ்க்கையை அவன் மேற்கொள்ள வேண்டும். இந்த விழிப்புணர்வு தான் மனிதனுடைய உண்மையான உயர்வாகும். இதில் தான் மனிதனுடைய எல்லா வெற்றியும் அடங்கியுள்ளது.

இறைவனைச் சார்ந்திருக்கும் வாழ்வு முதலில் இறைவனை அறிந்துக் கொள்வதில் இருந்து தொடங்குகிறது. ஆணாயினும், பெண்ணாயினும் இறைவனை அறிந்துக் கொள்ளும் போது தான் அவர்கள் உண்மையை அறிந்து கொள்கிறார்கள். உண்மையை அறிந்துக் கொண்ட இந்த உணர்வு ஓர் எழுச்சியூட்டும் அனுபவம். அது அவர்களுக்கு என்றும் தளராத உறுதியை உள்ளத்தில் ஏற்படுத்தும். அவர்களுடைய வாழ்க்கையில் சந்தித்த எல்லா ஏமாற்றங்களையும் இந்த உள்ள உறுதி மறக்கச் செய்து விடும். எனவே அவர்கள் இழப்புகளை பொருட்படுத்த மாட்டார்கள். எவ்வித இழப்புகள் நேரிட்டாலும் இறைவன் தங்களுடன் இருக்கின்றான் எனும் பேறு பெற்ற உணர்வுடன் நிறைந்து காணப்படுவார்கள்.

இறைவனின் படைப்பினங்களைப் பற்றி சிந்திக்கும் போது மனிதன் இந்த உணர்வுகளைப் பெறுகிறான். இந்த பிரபஞ்சம் இறைவனுடைய தன்மைகளின் வெளிப்பாடாகும். இறைவனை மனிதனுக்கு அறிமுகப்படுத்தும் ஒன்றேயாகும். கண்ணாடி அதன் முன் நிற்கும் மனிதனின் உருவத்தை பிரதிபலிப்பது போல், இறைவனது படைப்புகள் எல்லாம் இறைவனை பிரதிபலித்துக் காட்டுகின்றன.

பரந்து விரிந்த இந்தப் பிரபஞ்சம் இறைவன் எல்லையற்றவன் என்பதை உணர்த்துகிறது. சூரியனையும், விண்மீன்களையும் உற்று நோக்கினால் இறைவன் ஒளி மிக்கவன் என்பதைக் கண்டு கொள்ளலாம். மலைகளின் உயரங்கள் இறைவனின் மகத்துவத்தை காட்டுகின்றன. கடலின் அலைகளும் ஆற்றின் நீரோட்டமும் இறைவன் எல்லையற்ற அருட்கொடைகளின் கருவூலம் என்பதை நமக்கு எடுத்துரைக்கின்றன. மரங்களின் பசுமையில் இறைவனின் அருட்பேறுகளை காண்கிறோம்.

காற்றின் மென்மையில் மனிதன் இறைவன் அருகிலேயே இருக்கிறான் என்பதை உணர்கிறான். பறவைகளின் 'கிறீச்' ஒலியில் இறைக் கானங்களை கேட்கிறான்.

மேலும் மனிதன் பூமியில் வாழ்வதே இறைவன் இருக்கிறான் என்பதற்கு ஒரு அத்தாட்சியாகும். இறைவனை அடிப்படையாகக் கொண்ட வாழ்க்கையைத் இறைநினைப்பில் இருந்து தொடங்குகிறான். இறைவனின் அருகில் இருப்பதாக உணருகிறான். அவன் பார்க்கும் ஒவ்வொன்றும் அவனுக்கு இறைவனின் நினைவை ஊட்டுகின்றன. இறைநினைவு அவனுடைய மனதில் இருந்தும்

இதயத்தில் இருந்தும் அகலுவதில்லை. காலையிலும் மாலையிலும் இறைவனுடைய நினைவிலேயே திளைக்கிறான். மழை, பயிர் பச்சைகளுக்கு புத்துயிர் ஊட்டுவது போன்று இறைநினைவு மனிதனுக்கு புத்துயிர் அளிக்கிறது.

இறைவன் மனிதனுக்கு ஆன்மிகக் குவி மையமாகும். எவனுடைய இதயம் இறைவனோடு ஒன்றி விட்டதோ அவன் ஒவ்வொரு கணமும் ஆன்மிக அனுபவம் அடைகிறான். இறை நம்பிக்கை அவனுடைய ஆன்மிக வளர்ச்சிக்கு மூலாதாரமாக அமைகிறது. இறைவன் மீதுள்ள நேசம் அவன் இதயத்தை நிரப்பி விடும்போது அவனுக்கு வேறெதுவும் தேவையே இல்லை. இறைவன் எனும் மகா சமுத்திரத்தில் இருந்து அவன் அதில் மிதந்து திளைக்கிறான். அந்த ஆன்மிக விழிப்புணர்வில் மனிதன் தனக்கு வேறு எதுவும் தேவையில்லை என்று உணரும் அளவுக்கு அதிகமான சுகத்தைப் பெறுகிறான்.

இறைவனை அறிந்து கொள்ளும் ஒருவனுக்கு இந்தப் பிரபஞ்சம் முழுவதும் ஒரு திறந்த புத்தகமாகி விடுகிறது. ஒரு மரத்தின் இலைகள் ஒவ்வொன்றும் வேத நூலின் ஒரு பக்கம் ஆகி விடுகிறது. கதிரவனைப் பார்க்கும் போது இறைவன்

அவனுடைய விளக்கொளியைத் தான் அவனுடைய வேத நூலைப் படிப்பதற்காக ஏற்றி அருள்வதாக உணர்கிறான். பிரபஞ்சம் எனும் பல்கலைக்கழகத்தில் தன்னை ஒரு மாணவனாகக் காண்கிறான்.

இறைவனைக் காண்பது இறைவன் மீது மனிதன் கொண்டுள்ள அன்பின் ஆழமாகும். மனிதன் பிறவியிலேயே எல்லாம் வல்ல அந்த பரம்பொருளைக் காண விழைகின்றான். அவன் காண விழையும் அந்த இறைவன் அவனை விட மிக மேலானவன். வரையறைக்கு உட்படாதவன். மனிதனுடைய உணர்வுகளுக்கு எல்லாம் மையமாக விளங்குபவன். இறைவனை அறிந்தவன் தன் தாயின் அரவணைப்பில் உள்ள ஒரு குழந்தையை போல் திருப்தியடைகிறாள்.

இறைவனை உணர்ந்து விட்டால் அது ஒரு மனிதனை இறைவன் அல்லாத வேறு ஏதேனும் ஒன்றை தவறாக இறைவனாக ஏற்றுக்கொள் வதில்லை. தவறாகவும் உண்மைக்கு புறம்பாகவும் உள்ளவற்றை இறைவனாக ஏற்றுக்கொள்வதில் இருந்தும் தடுக்கிறது. தன்னுள் இருக்கும் ஆர்வத்தை நிறைவேற்றும் வகையில் அவன் இறைவனை அறிய முற்படுகின்றான். இறைவனை அறிய தவறி விட்டால் அது மனிதனுக்கு மிக இன்றியமையாததை அறியத்

தவறி விட்டதாகவே இருக்கும்.

இறைவனை அறிய முடியாத ஒருவன் தனக்கு இயல்பாக இருக்கும் ஆர்வத்தின் காரணமாக இறைவன் அல்லாத ஒன்றுக்கு இறைவனுக்குரிய தகுதியை வழங்கி விடுகிறான். இந்தத் தகுதி சில சமயங்களில் ஒரு குறிப்பிட்ட மனிதனுக்கு வழங்கப்பட்டு விடுகிறது. சில வேளைகளில் ஒரு விலங்குக்கு, சில நேரங்களில் இயற்கைக்கு அல்லது சில பொருட்களுக்காக வழங்கப் பெறுகிறது. சில தருணங்களில் அனுமானிக்கப்பட்ட சில கருத்துக்கும், வேறு சில காலங்களில் மனிதன் தனக்கு தானே அந்த சிறப்பை வழங்கிக் கொள்வதும் உண்டு. இவை யாவும் தவறானதே.

இறைவனை அறிந்து கொள்ள முடியாத போது அல்லது இறைவன் இல்லை என நிராகரிக்கும்போது இறைவனை உணர இயல்பாக எழும் உணர்வை அமுக்கி விட முடியாது. இதனால் தான் இறைவனை அறிந்துக் கொள்ள முடியாத ஆணும் பெண்ணும் இறைவன் அல்லாத வேறு எதையேனும் ஒன்றை இறைவனாக ஏற்கும் நிலைக்கு நிர்ப்பந்தமாக உள்ளாகிறார்கள். இவ்விதம் அவர்கள் கற்பனை செய்து கொள்ளும் இறைவன் இறைவன் அல்லாத இறைவனின் ஏதேனும் ஒரு படைப்பினமாகவே

இருக்கும். மனிதன் உண்மையான இறைவனை இறைவனாக ஏற்றுக் கொள்ளாமல் இருக்கலாம்; ஆனால் அந்த இறைத்தன்மையை, இதர படைப்பினங்களுக்கு வழங்குவதிலிருந்து தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியாது இதுவே மனித இயல்பு.

இறைவனை மட்டும் வணக்கத்துக்கு உரியவனாக ஏற்றுக் கொள்வதால் ஒரு மனிதனுடைய தரம் உயர்கிறது. இதற்கு நேர்மாறாக இறைவனைத் தவிர வேறு எதையும் இறைவனாக ஏற்றுக் கொள்வதால் அவன் மனிதன் எனும் நிலையில் இருந்து தாழ்ந்து விடுகிறான்.

இறைவனுக்கு முற்றிலும் அடிபணிவது தான் மனிதனுக்குரிய உண்மையான வாழ்க்கை.



மவுலானா வஹிதுத்தின் கான்

ஓர் இஸ்லாமிய ஆன்மிக அறிஞர். அமைதியை தன் வாழ்வின் நோக்கமாகக் கொண்டவர். இந்த குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டே, அவர் திருக்குர்ஆன் (மொழிபெயர்ப்பு / பொருளுரை / தெளிவுரை) மற்றும் இஸ்லாமிய நூற்கள் என 200-க்கும் அதிகமாக எழுதி உள்ளார். அவரின் மிகச் சமீபத்திய நூல் Penguin Books வெளியிட்ட (The Prophet of Peace - அமைதியின் தூதர் முஹம்மத்) என்பதாகும். அமைதிக்கான அவரின் பங்களிப்பை பன்னாட்டு சமூகம் அங்கீகரிக்கும் விதமாக கீழ்க்காணும் விருதுகளை வழங்கி கௌரவித்துள்ளது.

- தைமியுர்குஸ் அமைதி விருது
- பத்ம பூஷன் (இந்திய அரசு)
- சத்பாவனா (இராஜீவ் காந்தி தேசிய விருது)

மௌலானாவின் பதிவு செய்யப்பட்ட நிகழ்ச்சிகளை தொலைக்காட்சியிலும் காணலாம்:

ஈ டி.வி. (உருது)

செவ்வாய் - வெள்ளி - காலை 05.00 மணிக்கு

**CPS International,**

2001-ம் ஆண்டு Centre For Peace and Sprittuality என்ற அமைப்பை மவுலானா வஹிதுத்தீன் கான் நிறுவினார். இது, எந்த வித அரசியல், பொருளாதார, உள் நோக்கமு மில்லாத நிறுவனம். அமைதியை நிலைநாட்டவும் பல்வகைச் சமுதாய மக்களை ஒன்றிணைக்கவும், கலந்துரையாடவும் வழிகளை உருவாக்கி வருகிறது. (இறைவனால் பாதுகாக்கப்பட்ட) திருக்குர்ஆனிய அறிவுரையின் உந்துதலும், நபிவழி நடை முறையின் கவர்ச்சியும் இவர்களை இயக்கும் காரணிகளாகும். இஸ்லாமிய ஆன்மிக கொள்கைகளை அதன் அசல் வடிவில் உலகில் உள்ள எல்லா மக்களு டனும் பகிர்ந்து கொள்ள CPS விரும்புகிறது. அமைதி, சகிப்புத்தன்மை, வாழு - வாழ விடு என்கிற சக இருப்பின் அங்கீகாரம் அதன் வெளிப்பாடாகும்.

நவீன, அறிவியல் எண்ணம் கொண்ட இளைஞர் களையும், தேடல் மிக்க எல்லா வயதினரையும் CPS அழைக்கிறது.




எளிய நடை
அறிவார்ந்த முறை
அமைதி வழியில்

திருக்குர்ஆன் தமிழ் மொழியாக்கம்
கையடக்கப் பிரதியாக வெளியிடும்
பணி நடந்து வருகிறது.

ஏதிர்பாருங்கள் விரைவில்

மனிதன் பெற்றுள்ள எண்ணற்ற திறமைகளில் ஒரு சிறிதே இங்கு பயன்படுகின்றது. மனிதன் மரணம் இல்லாத ஒரு வாழ்க்கையை வாழ விரும்பிய போதிலும், அவனுடைய விருப்பமின்றியே மரணம் அவனை சூழ்ந்து கொள்கிறது. மரணம் அவன் வாழ்விற்கு முற்றுப்புள்ளி வைக்கிறது. வாழும்போது எண்ணற்ற ஆசைகளை இதயத்தில் சுமக்கின்றான், ஆனால் அவை நிறைவேறாமல் போய் விடுகின்றன. வாழும் போது அவன் கண்ட கனவுகள் எல்லாவற்றையும் நனவாக்க முடிவதில்லை. இந்நிலை ஏழை, பணக்காரன் என இருவருக்கும் ஒன்றே தான்.



GOODWORD
goodwordbooks.com